# பகவத் பாதை

• மலர் : 3 இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு • சேலம் • நவம்பர் 2013

• இதழ் : 2 • மாத இதழ் • தனி இதழ் ரூ. 10/- • வருடச் சந்தா ரூ. 100/-

## ஆழமான புரிதல்?

- ஸ்ரீ பகவத்



புரிதல் என்பது மேலோட்டமான – அறிவுபூர்வமான புரிதல் மட்டுமே

ஆழமான புரிதல் – உணர்வு பூர்வமான புரிதல் என்று எதுவும் கிடையாது.

- ஸ்ரீ பகவத்



ருமேனியா நாட்டிலிருந்து வந்த அன்பர் ஒருவர் சில நாட்கள் நம்முடன் தங்கியிருந்தார்.

அவருடன் உரையாடிக் கொண்டிருக்கும் போது அவர் ஒரு கேள்வி கேட்டார்.

"உங்களுடைய கருத்துகளைத் தெரிந்து கொண்டதும் மனம் அமைதியடைந்துவிடுகிறது. ஆனால் அந்த அமைதிக்கும் சில நேரங்களில் சோதனை ஏற்பட்டுவிடுகிறது. சூழ்நிலைகள் மாறும் போது மனோரீதியான அனுபவங்களும் மாறிவிடுகின்றன; மனோ ரீதியான பிரச்சினைகளும் ஏற்பட்டு விடுகின்றன. ஏன் இவ்வாறு நிகழ்ந்திடுகின்றது?"

நான் அவரிடமே திரும்பக் கேட்டேன். "என்ன காரணம் என்று உங்களுக்குத் தோன்றுகிறது? என்ன செய்தால் இந்த நிலைமை சரியாகும் என்று எண்ணுகிறீர்கள்?"

அதற்கு அவர் பதில் கொடுத்தார். "நமது மன உணர்ச்சிகளை எதிர்த்து நாம் எதுவும் செய்ய வேண்டியதில்லை என்பதை நான் புரிந்துகொண்டாலும், அது ஒரு அறிவுபூர்வமான Intellectual புரிதலாக மட்டுமே தோன்றுகின்றது. இதைவிட இன்னும் ஆழமான புரிதல் - உணர்வு பூர்வமான - ஆழ்மனது சம்பந்தப்பட்ட புரிதல் ஒன்று தேவைப்படுகிறதோ என்று தோன்றுகிறது".

இது அவருடைய பதில்.

இதுபோல் இன்னுமொரு அன்பர் பெங்களூரில் இருந்து தொடர்பு கொண்டார். அவர் அவருடைய அனுபவத்தைக் கூறினார்.

"உங்களுடைய கருத்துகளைத் தெரிந்து கொண்ட பிறகு எனது மனம் மிகவும் அமைதி ஆகிவிட்டது. ஆனால் காலப்போக்கில் எனது அமைதி குறைந்துவிட்டது. மீண்டும் உணர்ச்சிவசப்படும் நிலை ஏற்பட்டுவிட்டது. எனது மனைவியோடு அடிக்கடி கோபப்பட்டுவிடுகிறேன். எனக்குப் புரிதல் ஏற்பட்டது கூட மறந்துவிட்டது. அதை மீண்டும் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டியதுள்ளது".

அவரிடமும் நான் ஒரு கேள்வி கேட்டேன்.

"நமது கருத்துகளைப் புரிந்து கொள்வதற்கு முன்பும் நீங்கள் இவ்வாறு உணர்ச்சி வசப்பட்டிருப்பீர்கள். புரிந்த பிறகும் உணர்ச்சி வசப்பட நேர்ந்துள்ளதாகக் கூறுகிறீர்கள். இரண்டுக்கும் ஏதாவது வித்தியாசத்தை உணரமுடிந்ததா? நீங்கள் முன்பு உணர்ச்சிவசப்படும்போது, அது எவ்வளவு நேரம் நீடித்தது? புரிதலுக்குப் பிறகு உங்களது உணர்ச்சி வசப்பட்ட தன்மை எவ்வளவு நேரம் நீடிக்கிறது?"

அவர் பதில் கூறினார். "முன்பு அத்தகைய கோபதாபங்கள் வெகு நேரம் நீடித்திருக்கும். இப்போது விரைவாக அந்த உணர்ச்சிகள் என்னை விட்டுப் போய்விடுகின்றன".

"நீங்கள் புரியவேண்டியதைப் புரிந்து கொண்டுவிட்டீர்கள் என்பதற்குச் சான்று - ஆதாரம் இதுதான்" என்று அவருக்குக் கூறிவிட்டு மேலும் சில விளக்கங்களைக் கொடுத்தேன்.

அந்த விளக்கங்கள் ருமேனியா அன்பருக்கும், பெங்களூர் அன்பருக்கும் பொதுவாகவே இருந்தது.

புரிதல் என்பது மேலோட்டமான - அறிவுபூர்வமான Superficial and Intellectual - புரிதல் மட்டுமே.

ஆழ்நிலையான - உணர்வு பூர்வமான புரிதல் என்று எதுவும் கிடையாது.

முதன்முதலாக நமது கருத்தைப் புரிந்து கொள்ளும்போது ஒருவருக்கு என்ன ஏற்படுகிறது? அவருக்கு அமைதி எப்படிக் கிடைத்தது? உணர்வு பூர்வமான - ஆழ்நிலையான புரிதல்தான் மாற்றத்துக்குக் காரணமென்றால்

அத்தகைய புரிதல் ஏற்படும் வரை அமைதியே கிடைத்திருக்கக் கூடாதல்லவா? பிறகு எப்படி அந்த மேலோட்டமான புரிதல் நமக்கு அமைதியைக் கொடுத்திருக்க முடியும்?

மேலோட்டமான - புத்தி பூர்வமான Superficial - and Intellectual - புரிதல் மட்டுமே போதும். அது தான் நமக்கு அமைதியைக் கொண்டு வருகிறது.

அப்படி ஏற்பட்ட அமைதி, ஏன் நீடிப்பது இல்லை?

நாம் நமது புரிதலை எவ்வாறு ஆரம்பித்துள்ளோம் என்பதை நாம் இங்கு தெரிந்துகொள்ள வேண்டியுள்ளது.

ஆன்மிக முயற்சிகளிலும், ஆய்வுகளிலும் நாம் ஈடுபடுவதன் நோக்கம் என்ன?

நாம் நம்முடைய மனோரீதியான பிரச்சினைகளிலிருந்தும், வேண்டாத உணர்ச்சிகளிலிருந்தும் விடுபட வேண்டும் என்பதே

- புரிதலுக்கு முன்னால் நாம் நமது முகத்துக்கு முன்னால் எதிர்கொள்ளும் பிரச்சினை.

- மனவேதனை, பயம், கோபம், காமம் போன்ற உணர்ச்சிகளை நாம் வெற்றி கொள்ளவேண்டும் என்னும் எண்ணமே நமது நோக்கமாக உள்ளது.

புரிதலின்போது நாம் என்ன புரிந்து கொள்கிறோம்? எதனைப் புரிதல் என்று கூறுகிறோம்?

நம்மையறியாமல் நமக்கு ஏற்படும் உணர்ச்சிகளுக்கு எதிராக நாம் எதுவும் செய்யத் தேவையில்லை என்று முடிவு செய்கிறோம்.

நமது உணர்ச்சிகள் யாவும், நம்மையறியாமல்,

தாமாகத் தோன்றி, தாமாக மறைந்து விடுகின்றன.

- என்பதைப் புரிந்து கொள்கிறோம்.

நமது உணர்ச்சிகளுக்கு ஆதரவாகவோ அல்லது எதிராகவோ நாம் எதையாவது செய்யும் பட்சத்தில்,

நமது உணர்ச்சிகள் யாவும் தேவையில்லாமல் புதுப்பிக்கப்பட்டு நமக்குள்ளேயே ஒரு போராட்டத்தையும் ஏற்படுத்தி விடுகின்றன.

அவை சம்பந்தமாக நமக்கு எந்த வேலையும் கிடையாது என்பதைப் புரிந்துகொள்வதே

புரிந்து கொள்வது ஆகும்.

அப்படிப் புரிந்து கொள்வதால் என்ன ஏற்படுகிறது?

நமக்கு ஏற்படும் உணர்ச்சிகளை நிர்வகிக்கும் பொறுப்பை

கைவிட்டுவிடுகிறோம்.

புரிதலுக்கு முன்னால், நமது உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து

நமது முயற்சிகளையெல்லாம் அவற்றை நோக்கியே செய்துவந்தோம்.

அவற்றையெல்லாம் நமது முகத்துக்கு முன்னால் வைத்திருந்தோம்.

புரிதலுக்குப்பிறகு அவையெல்லாம் முக்கியத்துவம் இழந்து

நம் முதுகுக்குப் பின்னால் சென்றுவிடுகின்றன. அப்படி அவை நம் முதுகுக்குப் பின்னால் சென்றுவிட்டதால், நமது முகத்துக்கு எதிராக எதுவும் இல்லை.

இதனால் போராட்டம் எதுவும் இல்லாமல் நம் மனம் சாந்தியை அடைந்துவிடுகிறது.

அப்படி முக்கியத்துவம் இழந்துவிட்ட உணர்ச்சிகளுங்கூட

நம்மையறியாமல் சிலவேளைகளில் முக்கியத்துவம் பெற்றுவிடுகின்றன.

வருத்தம் ஏற்படும்போது அதிலிருந்து விடுபடவேண்டுமென்ற தூண்டுதல் நம்மையறியாமல் ஏற்பட்டுவிடுகின்றது.

பயமோ, கோபமோ ஏற்படும்போது நம்மையறியாமலேயே அவற்றிலிருந்து விடுபடவேண்டுமென்ற தூண்டுதலையும் ஏற்படுத்தி விடுகின்றது.

இதற்கு என்ன காரணம்? நமது புரிதல் பாதிக்கப்பட்டதுதான் இதற்குக் காரணமா?

நமது புரிதல் மறைந்துவிட்டதா?

நமது புரிதலை மறந்துவிட்டோமா?

ஓர் உதாரணம். நாம் பத்து வருடங்களாக ஒரு வாடகை வீட்டில் குடியிருந்து வந்தோம். அங்கிருந்துதான் தினமும் அலுவலகத்துக்குச் சென்று வந்தோம். எங்கு போய் வந்தாலும் மாலையில் வீட்டுக்குத் திரும்பி வந்துவிடுவோம்.

நமது குழந்தைகளின் வசதிக்காக நாம் பக்கத்துத் தெருவிலுள்ள புதியதொரு வாடகை வீட்டில் குடியேறிவிடுகிறோம். பழைய வீட்டுக்கு வேறு நபர்கள் குடிவந்துவிடுகிறார்கள்.

இந்நிலையில், அலுவலகம் முடிந்த நாம் பைக்கில் வருகிறோம். பழக்க தோஷத்தின் காரணமாக, நம்மையறியாமல் நம்முடைய பைக்கை பழைய வீட்டின் முன்னால் சென்று நிறுத்துகிறோம். நிறுத்திய பிறகு தான் தெரிகிறது, இடம் மாறி பழைய வீட்டுக்கு வந்துவிட்டோம் என்று.

பழைய வீட்டுக்கு வந்துவிட்டோம் என்று தெரிந்த நிலையில், நாம் நமது பைக்கைத் திருப்பிக் கொண்டு புதிய வீட்டுக்குப் போய்விடுகிறோம்.

ஏன் இப்படி நாம் பழைய வீட்டுக்குப் போனோம்?

புதிய வீட்டுக்கு மாறிவிட்டோம் என்பதை நாம் புரிந்திருக்கவில்லையா?

புதிய வீடு எங்கே உள்ளது என்பதே தெரியாமல் அதை மறந்துவிட்டோமா?

அறியாமையின் காரணமாக இந்தத் தவறு நிகழ்ந்துவிட்டதா?

இவை எவையுமே காரணமல்ல. நமது பழக்கம்தான் காரணம். நமது வாசனைதான் காரணம். நம்முடைய மனப்பதிவுதான் காரணம்.

இதிலிருந்து விடுபட நாம் என்ன செய்யவேண்டும்?

புரிதலில் குழப்பம் இருந்தால், புரிதலை சரியான புரிதலாக மாற்றிக் கொள்ளலாம்.

ஆனால் அங்கு எந்தக் குழப்பமும் இல்லை.

வேறு வீட்டுக்குப் போய்விட்டோம் என்பதை உணர்வுபூர்வமாகவோ - ஆழமாகவோ புரிந்து கொள்ளவேண்டிய அவசியம் இல்லை.

அப்படியொரு புரிதலே கிடையாது.

"பழைய வீட்டுக்குப் போகக்கூடாது", "பழைய வீட்டுக்குப் போகக்கூடாது" என்று ஜபம் செய்து, சங்கல்பத்தை ஏற்படுத்திக் கொள்ளவேண்டுமா?

பழைய வீட்டுக்கு நம்மையறியாமலேயே செல்லும் பழைய பழக்கம்

புதிய வீட்டுக்கு நம்மையறியாமலேயே செல்லும் புதிய பழக்கமாக மாறிவிட வேண்டுமா?

அப்படி மாறுவதைத்தான் ஆழ்நிலைப் புரிதல் என்று கூறுகிறோமா?

உண்மையில் இதுவல்ல புரிதல். இவையெல்லாம் மனப்பதிவுகளே - வாசனைகளே.

மனப்பதிவுகளுக்கும், புரிதலுக்கும் சம்பந்தம் கிடையாது.

மனப்பதிவுகள் யாவும் நம்மையறியாமல் தான் வெளிப்படும். unconscious ஆகத்தான் வெளிப்படும்.

நம்மையறியாமல் எவை வெளிப்பட்டாலும் அவைகளுக்கு நாம் பொறுப்பல்ல.

ஆனால் அப்படி வெளிப்பட்டவை நமது கவனத்துக்கு வந்துவிடும்போதுதான் நாம் பொறுப்புடையவர்களாக மாறுகிறோம்.

நமக்கு ஏற்படும் உணர்ச்சிகளில் இருந்து விடுபட

நாம் நம்மையறியாமல் முயன்றால் தவறில்லை.

நாமாக - conscious ஆக முயற்சி செய்வது தான் தவறு.

நமது உணர்ச்சிகள் சம்பந்தமாக நமக்கு எந்த வேலையும் கிடையாது என்பதைப் புரிந்து கொண்டது மட்டுமே நமது புரிதல்.

உணர்ச்சிகளைப் பொறுத்து நாம் எதுவுமே செய்யத் தேவையில்லை என்பதை

நாம் முதன்முதலாகப் புரிந்து கொள்ளும் போது நாமே நம்மை எதிர்த்துப் போராடும் அகப்போராட்டம் முடிவுக்கு வந்து விடுகிறது.

அந்த நிலையில் நம் மனதில் அமைதி ஏற்பட்டுவிடுகிறது. ஆனால் அந்த அமைதியின்மீது நாம் ஈடுபாடு காட்டும்போது

அதுவும் உணர்ச்சிகளின் மீது - நமக்குப் பிடித்தமான மன உணர்வுகளின் மீது ஈடுபாடு காட்டுவதே ஆகும்.

எந்த உணர்ச்சிகளில் நாம் ஈடுபாடு காட்டினாலும்

நாம் அவற்றை நமது முகத்துக்கு முன்னால் கொண்டு வந்துவிடுகிறோம்.

அவற்றைத் தக்கவைக்கவோ, அப்புறப்படுத்தவோ போராடிவிடுகிறோம்.

மனோரீதியாக நாம் அடைவதற்கு எதுவுமே இல்லை என்று புரிந்து கொண்ட பிறகும்,

"மன அமைதி" என்ற போர்வையில் நாம் அடைவதற்கு எதுவோ ஏற்பட்டு விடுகின்றது.

மனோ ரீதியாக நாம் அடைவதற்கு எதுவுமே இல்லை என்ற நிலையில் தான்

நமது மன உணர்ச்சிகள் யாவும் நம் முதுகுக்குப் பின்னால் போய்விடுகின்றன.

மனோரீதியாக ஏதாவது ஒரு நிலையை நாம் அடையவேண்டும் என்ற முடிவை

நாமாக எடுத்தாலும் சரி

அல்லது வேறு எவருடைய

கருத்தையாவது பின்பற்றி எடுத்தாலும் சரி

அப்போதுதான்

நாம் நமது புரிதலுடன் முரண்பட்டுக் கொள்கிறோம்.

கருத்தளவில் நாம் நமது புரிதலில் நமது மேலோட்டமான - புத்தி பூர்வமான புரிதலில்

சந்தேகமோ, குழப்பமோ இல்லாமல் இருந்தால் போதும்.

நம்மையறியாமல் ஏற்படும் மன உணர்ச்சிகளையோ - போராட்டத்தையோ நாம் கணக்கில் எடுத்துக்கொள்ளத் தேவையில்லை.

நாம் புரிந்தது புரிந்ததுதான். நாம் புரியவில்லையோ என்று குழம்பிக்கொள்ளத் தேவையில்லை.

மனப்பதிவுகளை அப்படியே விட்டுவிட வேண்டியதுதானா?

அவற்றை நாம் தூய்மைப்படுத்த வேண்டாமா?

மனப்பதிவுகளை நாம் பழிக்கத் தேவையில்லை.

மனப்பதிவுகளின் உதவியோடுதான் நாம் நமது அன்றாடப் பணிகளையே மேற்கொள்ள முடியும்.

மனப்பதிவுகளே இல்லாத பட்சத்தில் நாம் அனைவரும் உணர்ச்சிகளற்ற ஜடப் பொருட்களாகிவிடுவோம்.

உணர்ச்சிகளின் உதவி நம்முடைய மனோரீதியான வாழ்வுக்குத் தேவையில்லாமலிருக்கலாம்.

ஆனால் நம்முடைய மன உணர்ச்சிகளின் உதவியில்லாமல் நமது உலகியல் செயல்கள் எவற்றையும் நம்மால் நிறைவேற்ற முடியாது.

தேவைக்கேற்ப நமது உணர்ச்சிகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் உணர்ச்சிகள் எவற்றையும் சீரமைக்கத் தேவையில்லை.

"உணர்ச்சிகள் கட்டுப்பாட்டுக்குள் வந்தால்தான்,

நாம் புரியவேண்டியதைச் சரியாக புரிந்து கொண்டோம்" என்ற தவறான முடிவுக்கு வந்துவிடக்கூடாது.

"இன்னும் நாம் ஆழமாகப் புரிந்து கொள்ளவேண்டும்" என்று நாம் முடிவு செய்தோமானால் அதன் பொருள் என்ன?

நமது புரிதல் சரியானதல்ல; போதுமானது அல்ல

- என்பது தான் பொருள்.

நமது புரிதலைக் குறித்து சந்தேகங்கொள்வதுதான் புரிதலைப் பாதிக்கின்றது.

புரிதலைப் பலவீனப்படுத்துகிறது.

புரிதலை மறந்துவிடுவது புரிதலுக்கு எதிரானதல்ல.

நாம் புரிந்துகொள்ளவில்லையோ என ஐயங்கொள்வதுதான்

புரிதலுக்கு எதிரானது.

அமைதியின்மையிலிருந்து விடுபட்டு, அமைதிக்கு வரவேண்டிய கடமை எதுவும் நமக்குக் கிடையாது.

மனோரீதியான இயக்கங்கள் அனைத்தும் அவை எப்படி வேண்டுமானாலும் இயங்கிக் கொள்ளட்டும் என

அவைகளுக்கு முழுச்சுதந்திரம் கொடுப்பதே நமது கடமையாகும்.

அவற்றை நெறிப்படுத்துவது நமது கடமை அல்ல.

சுதந்திரம் இயங்கும் போது

நாமும் நமது அனுபவங்களும் இணைந்து ஒன்றாகி விடுகின்றோம்.

சுதந்திரமற்ற நிலையிலேயே

நாம் வேறு, நமது அனுபவம் வேறு என்ற பிரிவும்

போராட்டமும் இருந்துகொண்டிருக்கிறது.

அந்தச் சுதந்திர நிலையில் நம் மனோ இயக்கம் முழுவதும்

புனித கங்கையாய் பிரவகித்து ஓடுகின்றது.

- அப்படி ஓடவேண்டும் என்ற நோக்கம் எதுவும் இல்லாமல்.

★

## ஐயாவின் ஞான உரைகள் (Spritual Talk)

ஐயாவின் ஞான உரைகளை தற்போது www.sribagavath.org என்ற இணையத்தில் Gallery Folder -ல் இருந்து இலவசமாக கேட்பதற்கும் (Listen) பதிவிறக்கும் (Download) செய்வதற்கும் வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

இந்தத் தகவலை உங்கள் ஆன்மீக நண்பர்களுக்கும் தெரியப்படுத்தி நீங்களும் பயனடையும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஸ்ரீபகவத் மிஷன், சேலம்.

## ஐயாவுடைய நிகழ்ச்சி

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 7-12-2013 சனி | மனவளக்கலை மினி ஹால், 28/11, 27-வது தெரு, வசந்த் & கோ எதிர்புறம், 4-வது மெயின் ரோடு, நங்கநல்லூர், சென்னை-61. | **"தியானத்திற்கு அப்பால்"** மாலை 5-00 to 8-00 மணி வரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், செல் : 99520-71525 98840-92438, 95660-39408 |
| 22-12-2013 ஞாயிறு | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், | **"தன்னை அறியும் ஞானம்"** மாலை 5-00 மணிக்கு | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், செல் : 99520-71525 98840-92438, 95660-39408 |
| 29-12-2013 ஞாயிறு | சங்கரன் மஹால், கருக்குப்பேட்டை, செங்கல்பட்டு to காஞ்சிபுரம் மெயின்ரோடு, காஞ்சிபுரம். | **"தன்னை அறியும் ஞானம்"** மாலை 4-00 மணிக்கு | ஐயம்பேட்டை மனவளக்கலை மன்ற அறக்கட்டளை, பேரா.**புகழேந்தி,** செல்: 9095689649 குருஜீ அ/நி. **நாகேஸ்வரன்,** பேராசிரியர் செல் : 99441 42267 |

## ஞானமுகாம்

**விழுப்புரம்**

நாள் : 14-2-2014 இரவு முதல் 16-2-2014 மாலை / இரவு வரை

இடம் : பாலாஜி அரங்கம், ரெட்டியார் மில் நிறுத்தம், விழுப்புரம்,

தொடர்புக்கு : பேராசிரியர் **ரவிச்சந்திரன்,** விழுப்புரம். செல் : 94437-29525

உணவுக்காக ஆகும் செலவுகளை பங்குபெறும் அனைவரும் பகிர்ந்துகொள்ளலாம். முன்பதிவு அவசியம்

**சென்னை**

நாள் : 13-12-2013 இரவு முதல் 15-12-2013 மாலை / இரவு வரை

இடம் : சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், 23/10, பழைய பரோடா வங்கித் தெரு, செக்கரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை

தொடர்புக்கு : செல் : 99520-71525, 72991-08757

நன்கொடை ரூ. 1600/- (தங்குமிடம், உணவு, தேனீர், குறிப்பேடு உட்பட) முன்பதிவு அவசியம்

### ஞான முகாமிற்கு கலந்துகொள்ளுவதற்கு தேவையான தகுதிகள்

- ஐயாவுடைய கருத்துகளில் அனுபவமும், உடன்பாடும் உள்ளவர்களாக இருக்கவேண்டும்
- தாங்கள் பெற்ற தெளிவில் மட்டுமே உறுதி பெறும் நோக்கம் உள்ளவர்களாக இருக்கவேண்டும்
- வேறு கருத்துகளில் ஈடுபாடு உள்ளவர்கள், தற்காலிகமாவது ஐயாவின் கருத்துகளை முழுமையாகப் புரிந்துகொள்ள அக்கறை காட்டவேண்டும்
- முரண்பாடான கருத்துகளை உடையவர்கள், தனிச்சந்திப்பை மட்டுமே நாடவேண்டும்.

## ?கேள்வி பதில்¿

கேள்வி : நான் பகவத் ஐயாவின் புத்தகம் வழியாக மனதின் இயக்கத்தை நன்றாகப் புரிந்துகொண்டேன். நடைமுறை வாழ்வில் ஓர் அளவிற்கு அமைதியும் அடைந்துள்ளேன். புரிந்து கொண்ட பிறகும் கூட ஏன் முன்பு போல் கோபம், துக்கம், வேதனை ஏற்படுகிறது? புரிந்து கொண்ட பிறகு எல்லாவற்றிலும் இருந்து விடுதலை அல்லவா ஏற்பட வேண்டும்? எப்போது முழுமையான விடுதலை ஏற்படும்? இதில் நான் மேலும் புரிந்துகொள்ளவேண்டியது என்ன?

பதில் : நமது மனதின் இயக்கத்தை எதிர்த்து நாமாக ஒன்றுமே செய்யமுடியாது. "அது தாமாகத் தோன்றி, தாமாக மறையும் இயக்கம்" என்ற மனதைப் பற்றிய புதிய அணுகுமுறையை முதலில் நாம் நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

புரிந்து கொள்வது என்பதே நமது மன இயக்கத்தை எதிர்த்து நாமாக ஒன்றும் செய்ய முடியாது என்பது தான். அப்படி இருக்கும் போது புரிந்துகொண்ட பிறகும் கூட நமக்கு கோபம், துக்கம், வேதனை என அனைத்தும் ஏற்படத்தான் செய்யும். புரிந்துகொண்டால் அதன் பிறகு உங்களுக்கு துக்கமோ, பயமோ, கோபமோ வரவே வராது என்று எப்போதும் கூறப்படவில்லை.

நமக்கு ஏற்பட்ட துயரத்திற்கும், வேதனைக்கும் நாமாக ஒன்றுமே செய்யமுடியாது என்பதுதானே புரிதல். நமக்கு எப்படிப்பட்ட வேதனை உணர்வு ஏற்பட்டாலும் சரி, துயரம் ஏற்பட்டாலும் சரி, அவற்றை எந்த வகையிலும் மாற்றவோ, சரி செய்யவோ, சீர் அமைக்கவோ முடியவே முடியாது என்பதைப் புரிந்து கொள்வது தான் ஞானம் என்று கூறப்படுகிறது.

நமக்கு ஏற்படும் துன்பங்கள் நம்முடைய மனதின் கவனத்திற்கு வராமல் நாம் எத்தனை முறை போராடினாலும் தவறு கிடையாது. இந்த இடத்தில் நாம் புரிந்துகொள்ள வேண்டியது நமது மனதின் கவனத்திற்கு வராமல் போராடியதற்கு நாம் எந்த வகையிலும் பொறுப்பு கிடையாது என்பதே. எப்போது நமது மனதின் கவனத்திற்கு வருகிறதோ அப்போது தான் நமது புரிதல் செயல்படத் தொடங்குகிறது. புரிதல் செயல்படத் தொடங்கியபின் நம்முடைய துயரத்தை எதிர்த்து நாமாக எதுவும் செய்யாமல் இருந்தால் போதும். நமது துயரத்திலிருந்து தாமாகவே விடுதலை அடைந்துவிடுவோம்.

புரிதல் என்றால் அறிவு பூர்வமான புரிதல் ஒன்று தான். அதில் மேலோட்டமான புரிதல், ஆழமான புரிதல் என்றெல்லாம் எதுவும் கிடையாது. புரிந்தால் புரிந்தது தான். நம் மனதின் கவனத்திற்கு தெரிகிற போது எல்லாம் நாம் முடித்து கொண்டால் மட்டுமே போதும்.

ஒரு நீர்த்தேக்கத்தில் (dam) தண்ணீர் கொள்ளளவு எவ்வளவோ, அவை முழுவதும் தண்ணீர் நிரம்பி உள்ளது என வைத்துக்கொள்வோம். Dam-ன் மதகு திறந்துவிடப்படுகிறது எனில் இதுவரை சேமிக்கப்பட்ட தண்ணீர் சீறிப்பாய்ந்து வெளியேறி மதகின் மட்டத்தை அடையும். அதன் பிறகு மதகு அப்படியே இருக்கும் பட்சத்தில் dam-க்கு வரும் தண்ணீர் வெளியேறிக் கொண்டுதான் இருக்கும். ஆனால் dam-ல் மதகு திறப்பதற்கு முன்பு தேக்கிய தண்ணீர் மதகு திறந்தவுடன் சீறிப்பாய்ந்து வெளியேறிய வேகத்திற்கும், அழுத்தத்திற்கும், dam-ன் மதகு திறந்து உள்ள நிலையில் வரும் தண்ணீர் வெளியேறும் போது இருக்கும் வேகத்திற்கும், அழுத்தத்திற்கும் நிறைய வித்தியாசம் இருக்கும்.

முதலில் மதகு திறந்தவுடன் சீறிப்பாயும் தண்ணீர் வேகத்திற்கும், பிறகு மதகு மட்டத்தை அடைந்த பின்பு dam-க்கு வரும் தண்ணீர் வெளியேறுவதற்கும் ஆன வித்தியாசம் நம்மால் நன்கு அறியமுடியும். ஆனால் மதகு திறந்திருந்த நிலையில் dam-க்கு வரும் தண்ணீர் வெளியேறிக்கொண்டு தான் இருக்கும். ஆனால் தண்ணீர் வெளியேறிக் கொண்டிருப்பது நம்முடைய வெளிப்பார்வைக்கு பார்த்தால் தெரியாது. ஆனால் தண்ணீர் வெளியேறுவது வெளியேறிக் கொண்டுதான் இருக்கும்.

இப்படி தான் நமது மனதில் புரிதலும் செயல்படுகிறது. முதன்முதலில் பகவத் ஐயாவின் மனதைப் பற்றிய புதிய அணுகுமுறையை நாம் தெரிந்து கொள்கிறோம். இதனால் மனதில் தேங்கி இருந்த மன உணர்ச்சிகள் அனைத்தும் புரிதல் என்னும் மதகு வழியாக சீறிப்பாய்ந்து மனதிலிருந்து வெளியேறுகிறது. இப்படி மனதிலிருந்து வெளியேறுவதை முற்றிலும் புதுமையான ஓர் அனுபவமாக நாம் உணர்கிறோம். இப்படி ஏற்படும் அனுபவத்தால் நாம் நமது மனம் மிகவும் இலேசானது போலவும், உற்சாகமாகவும், மகிழ்ச்சியாகவும் மேலும் சிலர் உணர்ச்சிவசப்பட்டு அழுவதும், அடக்கமுடியாமல் வாய்விட்டு சிரிப்பதும் என ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக உணர்ந்து கொள்கிறோம். இப்படி வெளியேறுவதை நாம் மிகவும் விரும்புகிறோம். பிறகு இப்படி இருப்பது போலவே எப்போதும் இருக்க வேண்டும் என எதிர்ப்பார்க்கின்றோம்.

உண்மையில் அப்படி ஏற்படுவது அதிகப்படியான மன உணர்ச்சிகளின் தேக்கத்திலிருந்து மனம் விடுபடுவதே ஆகும். தண்ணீர் மதகு மட்டத்தை அடைவது போல் நம்முடைய மனமும் யதார்த்த நடைமுறை வாழ்விற்கு வருகிறது. அதன்பிறகும் dam-க்கு தண்ணீர் வருவதும், போவதும் போல நமக்கு துன்பமும், துயரமும் வருவதும், போவதுமாக உள்ளது. ஆனால் முதலில் ஏற்பட்டது போல் அழுத்தமும், வேகமும் ஏற்படுவதில்லை. அதுபோல் முதலில் ஏற்பட்டது போல் மகிழ்ச்சி, உற்சாகம், மனம் இலேசான தன்மை போன்றவை ஏற்படுவதில்லை.

இங்கு நாம் புரிந்துகொள்ள வேண்டியது நமக்கு எது எப்படி நிகழ்ந்தாலும் நாம் நமது மனதின் இயக்கத்திற்கு எதிராக எதுவுமே செய்யமுடியாது என்ற நமது மனதின் இயலாமையைப் புரிந்து கொள்வதுதான் முக்கியம். இந்த அறிவுபூர்வமான புரிதலினால் ஏற்படும் Mind Relaxation மீது நாம் எந்த வகையான பற்றையும் வைத்துக்கொள்ளக் கூடாது. அப்படி Mind Relaxation மீது பற்று வைப்பதால் தான் முன்பு இருந்ததுபோல் இப்போது Relaxation இல்லையே எனக்கூறுகிறோம். மேலும், இன்னும் ஆழமாகப் புரிந்துகொள்ள வேண்டியது எதுவும் உள்ளதோ எனக் கேட்கிறோம்.

நீங்கள் அறிவுபூர்வமாக புரிந்துகொண்ட பிறகு உங்களுடைய மனதின் மதகு முழுவதுமாக திறந்துவிடுகிறது. அதில் எந்த உணர்வு வேண்டுமானாலும், எப்படி வேண்டுமானாலும் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் இருக்கலாம். புரிந்துகொண்ட நமக்கு எதற்கு ஏற்படவேண்டும்? எவ்வளவு நேரம் இருக்கும்? எப்போது முடியும்? போன்ற கேள்விகளுக்கு எல்லாம் இங்கு இடமே கிடையாது.

நாம் நம்முடைய மனதின் மதகைத் திறந்து வைத்துவிட்டோம். எவையாக இருந்தாலும் வெளியேறியே தீரும். அதைப்பற்றி நாம் சிந்திக்க வேண்டிய அவசியம் இல்லை. மதகு திறந்திருந்தால் தண்ணீர் நிச்சயமாக வெளியேறியே தீரும் என்ற புரிதலோடு முடித்துக்கொள்ளவேண்டும். மனதின் இயலாமையைப் புரிந்துகொண்டால் போதும்; விடுதலை என்ற Relaxation தாமாக ஏற்படும். நாமாக விடுதலைக்கு எந்த முயற்சியும் எடுக்கத் தேவையில்லை.

மனதின் இயலாமையைப் புரிந்துகொண்டால் போதும் விடுதலை என்னும் Relaxation தாமாக ஏற்படும்.

V.A.P. சரவணன், சேலம்
செல் : 99942-05880

## பகவத் பாதையில் மலர்ந்த மலர்
## புரிதலுக்கு பின்னே ..... அனுபவம் ....

என்றும்போல் அன்றும் அதிகாலை தி.நகர் பனகல் பூங்காவில் நடைப்பயிற்சி மேற்கொண்டேன். தினமும் சீகுஸ், Reverse Walking போன்ற வித்தியாசமான, மிகச் சிறந்த உடற்பயிற்சிகள் மேற்கொள்வது வழக்கம். திறந்தவெளியில் பின்னே நடத்தல் பயிற்சி மேற்கொண்டிருந்தபோது என் கண்ணுக்கே புலப்படாமல் வழியிலேயே வைத்திருந்த ஒரு முக்கோணக்கால் கொண்ட விளக்குக் கம்பத்தில் கால் இடறி மல்லாக்க விழுந்த நேரம் எந்தவொரு சிந்தனையும் இல்லாமல் கவனம் முழுவதும் விழுந்து அடிபட்ட என் இடக்கையில் தான் இருந்தது. அக்கணம் "அடாடா போன வருடம் வலக்கை அடிபட்டதே; இவ்வருடம் இந்தக் கையா?" என்று மட்டுமே தோன்றியது. எவ்வாறு இப்படி விழுந்தேன்? ஏன் கவனிக்கவில்லை? என்று ஒரு கணம் தோன்றினாலும், நானாக சுதாரித்துக் கொண்டு எனது வலக்கையால் இடக்கையை தாங்கிக் கொண்டு எழ முயன்றும் முடியவில்லை.

என்னைச் சூழ்ந்த சிலர் வேடிக்கை பார்த்த வண்ணம் இருந்தார்களே தவிர உதவ முன்வரவில்லை. அவர்களோ நான் ஆசனம் செய்கிறேனோ என்றுகூட நினைத்திருக்கக்கூடும். சமயோஜிதமாக நான் ஒருவரை அழைத்து என்னைத் தூக்கி, வீட்டிற்கு அழைத்துச் செல்லுமாறு கேட்டுக்கொண்டு வீடு வந்து சேர்ந்தபிறகு, அதற்கடுத்ததாக காயம்பட்ட கையை சரிபண்ணும் எண்ணத்தில் ஆகவேண்டிய காரியங்களில் ஈடுபட்டது எண்ணம் - தீர்வைத்தேடி.

Surgery எல்லாம் முடிந்து ஆஸ்பத்திரியில் தனியாக படுத்திருந்தபோது, விபத்து நடந்த, சம்பவம் தானாக மனதில் உதித்தது. (Thought) பொழுது போகாததால், அதனை Thinking ஆக மாற்றி ஏன் எதற்கு, எனக்கு ஏன் இந்த விபரீதம் என அடுத்தடுத்தாற்போல் ஓடிக்கொண்டேயிருந்தது. ஆனால் என்ன ஆச்சரியம், ஏதேனும் (excuse) சாக்குபோக்கு தேடாமல், ஆமாம் நிகழ்ந்தது, என்ன செய்வது, முடிந்துவிட்டது. ஆக வேண்டிய காரியமும் பார்த்தாகிவிட்டது என்ற எண்ணமே மேலோங்கி வந்ததாலோ என்னவோ அந்த நீரோட்ட எண்ண அலைகள் ஓடி மறைந்த வண்ணம் தானாகவே அமைதி அடைந்தது. ஆக நான் விழுந்த சம்பவம் நினைவுக்கு வராமலில்லை. இருப்பினும் என்னுள் போராட்டமில்லை.

இந்த நிகழ்வு என் ஞானப்புரிதலின் after effect-ஐக் கண்டு சற்று ஆச்சரியமடைந்தேன், மனைவியிடம் இந்நிகழ்வை மற்றும் மனோநிலை குறித்து பகிர்ந்துகொண்டேன். இதனை அவள் வேறொரு கோணத்தில் நோக்கினாள். பழகிப்போன accident டினால் உங்கள் மனது பக்குவப்பட்டு அந்த மனோநிலைபோல் தோன்றுகிறதோ என வினவினாள். என்னதான் accident பழகினாலும், போன வருடம் ஏற்பட்ட விபத்திலும் இந்த மனோநிலையில் தான் இருந்தேன். இந்த நிகழ்வு மீண்டும் ஊர்ஜிதப்படுத்தியது. ஆதலால் நமக்கு இந்தப் பிரவாகம், புரிதலுக்குப் பின்னே தான் ஏற்பட்டுள்ளது. அதுவும் நிரந்தரமானது தான் என்றும் உறுதியாகக் கூற முடிகிறது.

என் மேல் பாசங்கொண்ட குடும்பத்தார், நண்பர்கள், அலுவலர்கள் அக்கறையின் பேரில் நிகழ்வை நான் என்னவோ Master Plan போட்டு செய்ததுபோல் கடிந்ததும், வருத்தப்படச் செய்ததும், வருத்தப்பட்டதுபோல் நான் நடித்ததும் அதனால் அவர்கள் திருப்தியடைந்ததும் தானாக இயங்கும் புறச்செயலை எதிர்கொள்ளும் ஆற்றலைக் கண்டு வியப்புற்றேன் - போராட்டமில்லாமல்.

இம்மாதிரி பல (crisis) சிக்கலான சூழ்நிலைகளையும் சுலபமாக கையாளும் விதத்தை, தானாக சீர்படுத்திக் கொள்ளும் நிலையை அருளிய எங்கள் பகவத் ஐயாவிற்கு நன்றி.

அன்புடன்

S. நந்தகுமார், வங்கி அதிகாரி
சென்னை-17. cell : 94442-80840.

# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்....

உங்கள் அனைவருக்கும் இனிய தீப ஒளித் திருநாள் வாழ்த்துகளை தெரிவித்துக்கொள்கிறேன்.

ஒளி என்பது தெளிவைக் குறிக்கும் ஒரு சொல்லாகவும் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

இதுவரை வந்த ஆன்மிக அமைப்புகளைப் பார்த்தோமானால் அதில் காலங்காலமாக குரு ஒளியாகவும் சீடர்கள் அந்த ஒளியின் வெளிச்சத்தில் தம் வாழ்க்கைப்பாதையை அமைத்துக்கொண்டு அந்த ஒளியை பிரதிபலிக்கக் கூடியவர்களாகவுமே இருந்துவந்து கொண்டிருக்கிறார்கள்.

அதாவது குரு மட்டுமே பிரதான மரமாகவும் அவருடைய சீடர்கள் அந்த மரத்தைச் சுற்றி வளரும் கொடியாகவுமே இருந்து வருகிறார்கள். குருவின் உபதேசத்தைப் பின்பற்றக் கூடியவர்களாகவும் அவரின் உபதேசத்தை மற்றவர்களுக்கு எடுத்துக் கூறுபவர்களாகவும் மட்டுமே இருந்து வருகிறார்கள்.

ஆனால் இதுவரை வந்த ஆன்மிக அமைப்புகளின் செயல்பாட்டில் இருந்து முற்றிலும் மாறுபடும் வகையில் நமது பகவத் ஐயாவின் புதிய அணுகுமுறையில் நடந்து வருகிறது. அவரது ஞானத்தெளிவைப் புரிந்துகொண்டு அதை உறுதிபடுத்திக்கொள்ளும் போது (Understanding and Confirmation) அது அவரவர்களுக்கே சொந்தமானதாகிவிடுகிறது. அவர்களுடைய சொந்தப் புரிதலாக மாறிவிடுகிறது. அவரவர்களே அவர்களுக்கு சுய ஒளியாக மாறிவிடுகிறார்கள். தமக்குத்தாமே ஒளியானதால் தம் வாழ்க்கைப்பாதையைத் தாமே அமைத்துக்கொள்கிறார்கள்.

நமது ஞானத்தெளிவைப் புரிந்துகொண்டவர்கள் எந்த மரத்தின் மீதும் படரவேண்டிய அவசியமில்லை. தனிமரமாகவே (சுய ஒளியாகவே) வளரத் தொடங்குவார்கள்.

பூமிக்கடியில் நமது வேரின்மூலம் (அறிவின் மூலம்) நமது வளர்ச்சிக்குத் தேவையான எல்லா சக்திகளையும் பெற்றுக்கொள்ளும் சுதந்திரமும் நம்மிடம் உள்ளது.

நமது இயக்கமும் எந்தக் கட்டுப்பாடுகளுமற்ற ஒரு சுதந்திரமாகச் செயல்பட்டுவருகிறது.

சுய ஒளியானவர்களுக்கு குரு - சிஷ்ய உறவுகூட உருவாகுவதில்லை. ஒரு சம உணர்வே தோன்றுகிறது. குருவைப் பின்பற்ற வேண்டிய அவசியமில்லை. தமக்குத் தாமே ஒளியானதால் தம் வாழ்க்கைப்பாதையைத் தாமே அமைத்துக்கொள்கிறார்கள்...

நமக்கு ஞானத்தெளிவைக் கொடுத்த பகவத் ஐயா அவர்கள் மீது நமக்கு ஏற்படும் உணர்வுகளெல்லாம் விசுவாசத்துடன் ஏற்படும் நன்றி உணர்வும் நட்புணர்வும் மட்டுமே.

இந்த இயற்கை எப்படி அனைவருக்கும் பொதுவானதோ அதுபோல் நமது ஞானப்புரிதலும் அனைவருக்கும் பொதுவானது.

எனவே நீங்கள் எந்த ஆன்மிக அமைப்பைச் சேர்ந்தவராக இருந்தாலும் தவறில்லை. இந்தப் புதிய அணுகுமுறையைப் புரிந்துகொண்டு தனிமரமாகவும் சுய ஒளியாகவும் நீங்கள் பிரகாசிக்க தீப ஒளித் திருநாளில் உங்களை அன்புடன் அழைக்கின்றோம்.

அன்புடன்,
K.S. ஜீவமணி, ஆசிரியர்,
செல் : 97891-65555

## "எதை அறிந்தால் ஞானம்?" ஜென் கதை

ஓர் இளைஞன் ஆத்மஞானம் பெற விரும்பினான். அதன் பொருட்டு மடாலயம் ஒன்றில் போய் சேர்ந்து கொண்டான். அங்கிருந்த காலத்தில் எண்ணற்ற நூல்கள், சூத்திரங்கள் எல்லாவற்றையும் படித்து நல்ல தேர்ச்சி பெற்றான். தத்துவம் தெரிந்த பண்டிதர்கள் பலரிடமும் விவாதம் நடத்தி வெற்றி வாகை சூடினான். இதனால் அவனுக்கு கர்வம் தலைக்கேறியது.

தான் அனைத்தையும் அறிந்தவன் என்பதை அனைவரிடமும் காட்டிக்கொள்ள முனைப்போடு இருந்தான்.

குருவிடம் எவராவது ஞானத்தைப்பற்றி சந்தேகம் கேட்டால்கூட இவன் குறுக்கிட்டு விளக்க ஆரம்பிப்பான்.

மற்றவர் குறுக்கிட்டு பேசும்போது குரு தன் உபதேசத்தை நிறுத்திக்கொள்வார்.

அதனால் தன் விளக்கம் சரியாக இருப்பதாகவும், தான் ஞானம் அடைந்துவிட்டதாகவும் தவறாக நினைத்துக்கொண்டான்.

பிறகு, தான் ஞானம் பெற்றதை அனைவரிடமும் குருவே அறிவிக்கவேண்டும் என விரும்பினான்.

அவனிடம் குரு சொன்னார் :

"நீ வெறும் தர்க்க சாஸ்த்திரத்தில் வல்லவனாக இருக்கிறாயே தவிர, நீ இன்னும் ஞானம் பெறவில்லை. வெறும் சாஸ்திர அறிவும், சூத்திர அறிவும், ஞானத்தைத் தராது; அறிவாளி என்ற கர்வத்தை மட்டுமே தரும். இதையும் கடந்து நீ இன்னும் புரிந்துகொள்ளவேண்டிய உண்மை உள்ளது".

இதைக்கேட்ட சீடன் மிகுந்த வருத்தமடைந்தான், "எவ்வாறு புரிந்துகொள்ளவேண்டும்? வழி சொல்லுங்கள் குருவே!" என வருத்தத்துடன் கேட்டான்.

குரு, "உலகின் பல இடங்களுக்கும் பயணம் செய். அப்போது கிடைக்கும் உலகானுபவம் உனக்கு ஞானத்தைப் புகட்டும்" என்றார்.

"ஞானம் அடைந்ததை எவ்வாறு புரிந்துகொள்வது? எப்போது மீண்டும் திரும்புவது?" என்று கேட்டான் சீடன்.

குரு அவனிடம், "ஆத்ம ஞானத்தில் உனது முன்னேற்றம் பற்றி எனக்கு மாதம் ஒரு முறை தகவல் அனுப்பு. அதன்மூலம் உனது ஞானநிலையை தெரிந்துகொள்கிறேன். நீ ஞானமடைந்தபிறகு திரும்ப அழைத்துக் கொள்கிறேன்" என்று கூறினார்.

இதை ஒரு சவாலாக எடுத்துக்கொண்ட சீடன் மிக விரைவில் தான் ஞானமடைந்த நிலையைத் தெரிவித்து வெற்றியுடன் திரும்புவதாக குருவிடம் கூறி பயணத்தை மேற்கொண்டான்.

ஒரு மாதம் சென்றதும் சீடனிடம் இருந்து பதில் வந்தது.

"என் உணர்வுகள் அனைத்தும் விசாலமடைந்து வருகின்றன. மெல்ல மெல்ல நான் இயற்கையுடன் ஒன்ற ஆரம்பித்துவிட்டேன்".

இதைப் படித்த குரு சலிப்புடன் அந்தக் கடிதத்தை கசக்கி எறிந்து விட்டார்.

அடுத்த மாதம் அவனிடமிருந்து தகவல் வந்தது, "இறைவன் எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருப்பதைக் கண்டேன்."

இதையும் கிழித்து வீசி எறிந்தார் குரு.

அடுத்து அவன் அனுப்பிய தகவலில், "சுற்றி நிகழும் எல்லா நிகழ்ச்சிகளுமே வலைபோல் ஒன்றோடு ஒன்று பின்னியிருக்கின்றன. அதன் பின்னணியில் அவன் அன்றி எந்த அணுவும் அசைவதேயில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது!" என்ற செய்தி இருந்தது.

குரு படிக்கும்போதே கொட்டாவி விட்டார்.

அடுத்த தகவலில், "ஆன்மா ஒன்றே, அதற்குப் பிறப்போ, இறப்போ கிடையாது. மனம் மட்டுமே சலனப்படுகிறது என்பது புரிந்துவிட்டது!" என்றிருந்தது.

குரு இதையும் பார்த்து முகத்தைச் சுழித்தார்.

அதன்பிறகு அவனிடமிருந்து தகவல் ஏதும் வரவில்லை. கிட்டத்தட்ட ஓராண்டுக்கும் மேல் கடந்துவிட்ட நிலையில் குரு தமக்கு எந்தச் செய்தியும் வராததை நினைவூட்டி அவனுக்கு தகவல் அனுப்பினார். உடனே தகவல் அனுப்பும்படி வலியுறுத்தினார்.

சீடன் சலிப்புடன் தகவல் அனுப்பினான்.

"தகவல் தெரிவிக்க என்ன இருக்கிறது? யார் யாரிடம் தகவல் தெரிவிக்கவேண்டும்? இருப்பது ஒன்றே என உணர்ந்த பிறகு அடைவதற்கும் எதுவுமில்லை, எதையும் நிரூபிக்கவும் தேவையில்லை".

குரு, அவன் ஞானமடைந்துவிட்டதைத் தெரிந்து கொண்டார்.

உண்மையைப் புரிந்துகொண்டவனுக்கு எதுவும் உயர்வானதுமில்லை; எதுவும் தாழ்வானதும் இல்லை; கர்வப்படவும் எதுவும் இல்லை; யாரிடமும் எதையும் நிரூபிக்கத் தேவையில்லை.

எதையும் விட்டு விலகத் தேவையில்லை; எதையும் சுமக்கத்தேவையில்லை. அவன் இருக்கும் நிலையிலேயே சர்வ சுதந்திரமாக இருக்கிறான்.

"சூரியனைப்போல் சந்திரன் சுட்டெரித்தாலும்
சந்திரனைப்போல் சூரியன் குளிர்ந்தாலும்
ஞானி ஆச்சரியப்படமாட்டான்".



**Book packet** containing printed books

To

*If undelivered please return to:*
Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.